# தமிழகம்

சிறப்பு ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

மலர் 5] குரோதி சித்திரை 8, 20—4—64 கிழமை இதழ். விலை – 10 காசுகள். [இதழ் 20




அப்பர் தரும் விருந்து

## இன்பம் இங்குவந்தெய்தும்

தொல்லையிரும் பிறவி சூழும் தளையினின்று விடுதலை பெறலாம்—நரை கூடிக் கிழப்பருவம் எய்துவதினின்றும் நீங்கலாம்—பசிப்பிணியினின்றும் தப்பலாம், பெரும்பிணியினின்றும், இறப்பினின்றும் நீங்கி இன்பம் எய்தலாம். எப்படி?

திருச்சேறையுள் நின்றருளிர்கின்ற செம்பொருளான எம்பெருமானின் இணையடிப்பேற்றை இரவு பகல் என்பதில்லையாக, எப்போதும் சிந்தை செய்யவேண்டும். நாம் வேறுபட்டு நில்லாமல் எம்பெருமானிடம் அடைக்கலமாகிவிடவேண்டும். அப்படி அடைக்கலமாகிவிட்டால், இன்பம் தானே வந்தெய்தும். அதுவும், இங்குவந்தெய்தும். சிறப்புக்கள் சேரும். இதை விளக்கும் அப்பரடிகளின் அழகிய பாடல் இதோ:

"பிறப்பு, மூப்பு, பெரும்பசி, வான்பிணி,
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்தும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே"

—அப்பரடிகள்

# வாழ்விக்க வந்தோர் வரலாறு

## 36. மூர்த்தியார்

பார்மன்னும் தொன்மைப் புகழ் பூண்ட பாண்டி நாட்டில் ஞாலம் அளந்த தெய்வத் தமிழ் வளர்த்த மாண்புமிக்க மதுரை மாநகரில் வணிகர் குலத்திலே தோன்றியவர் மூர்த்தியார் என்பார். அவர் சிவனடியன்றிவேறு சிந்தனை செய்யாத சிறந்த பக்தர்—அன்பே திருவுருவாகக் கொண்டவர்.

அவர், தமிழ் மதுரையில் எழுந்தருளியுள்ள ஆலவாயண்ணலுக்குச் சந்தனக் காப் பணிவதையே தமக்கு உரிய சிறந்த திருத் தொண்டாகக் கொண்டு வாழ்ந்தார். அவ்வாறு சிந்தைக்கினிதாய திருப்பணி செய்யும் நாளில், 'கானக்கடி சூழ் வடுகக் கருநாடர் மன்னன்' ஐம்பெரும் படைசூழத் தென்னகம்வந்து சந்தப் பொதியில் தமிழ் நாடுடை மன்னனான பாண்டியனை வென்று, கந்தப்பொழில் சூழ் மதுரையைக் காவல் கொண்டான். அவன், தாமும் சமணமையர் தவத்தை மெய் யென எண்ணிச் சமண சமயத்தையே தழுவி திருநீற ணியும் சிவனடியார்கட்கு தீங்குபல இழைத்துவந்தான். அவன் தீங்கு பல இழைத்தும் அவற்றிற்கிடையேமூர்த்தியாரின் திருத் தொண்டும் நிகழ்ந்தே வந்தது.

கருநாடக மன்னன் மூர்த்தியாருக்குத் தீங்குபல புரிந்தான் எனினும் மூர்த்தியாரின் திருத் தொண்டு இடையறுபடாமல் இனிதே நடைபெற்றுவந்தது. அவர் தொண்டினின்றும் வழுவினரில்லை ஒல்லும் வகையெல்லாம் திருநீற்று நெறிக்குத் தீங்கிழைக்கும் அம்மன்னன், மூர்த்தியார் சந்தனக் காப்பிடச் சந்தனக் கட்டைகளைப் பெற முடியாதவாறு எங்கெங் கும் தடைகள் செய்ய இயலுமோ அந்தந்தத் தடைகளை இழைத்தான். மூர்த்தியார் பெரிதும் மனம் வருந்தினர்.

கருநாட்க மன்னனின் இடையூறு கண்டு மனங்கலங்கிய மூர்த்தியார், 'ஐயகோ இக்கொடுங்கோலன் அழியமாட்டானோ? இந்த நாடு, திருநீற்று நெறி நின்று புரக்கும் மன்னனை என்று பெறுமோ?' என்று எண்ணி எண்ணிப் பகல் முழுதும் சந்தனக் கட்டையைத் தேடித் தேடித் திரிந்தார். எங்கெங்கு தேடினும் சந்தனக் கட்டை கிடைத்திலது. தன் திருத் தொண்டு தடைப்பட்டுவிடக் கூடாதே என்ற ஒரே நோக்கோடு அவர் திருக்கோயிலுக்கும் சென்றார். சந்தனக் கட்டை இன்று கிடைக்கவில்லை. ஆனாலும் என்ன? அதைத்தேய்க்கும் என் கை என்னிடம் தானே இருக்கிறது என்று எண்ணினர். ஒரு சந்தனக் கல்லின் மீது தனது முழங்கையை வைத்து நன்குகத் தேய்த்தார். ஆம். கட்டும் புறந்தோல் நரம்பு என்பு கரைந்து தேயத் தேய்த்தார். செங்குருதி வெள்ளம்போல் பெருகியது. எலும்பு வெளியே தெரிந்தது. மேலும். தேய்த்தார். என்புத் துளைகள் திறந்தன. மூளை ஒழுகியது.

(வளரும்)

---

## அடிகளார் சுற்றுப்பயணம்

| | | | |
|---|---|---|---|
| 23-4-64 | காலை | 10-00 மணி | திருமயம் (சரக ஆசிரியர் மாநாடு) |
| | மாலை | 4-00 ,, | கழனிவாசல் (கீ. புதுப்பட்டி திருச்சி மாவட்டம்) கழக உயர் நிலைப்பள்ளி ஆண்டு விழா. |
| 24-4-64 | மாலை | 3-00 ,, | கீரமங்கலம் (அறந்தாங்கி ஆரம்ப ஆசிரியர் சங்க ஆண்டு விழா) |
| | இரவு | 7-00 ,, | குளமங்கலம் (அறந்தாங்கி அருகில் வள்ளுவர் இலக்கிய மன்றம்) தங்கல்; அறந்தாங்கி வழித்தங்கல் மனை. |
| 25-4-64 | காலை | 5-00 ,, | பிரான்மலை திருத்தேர். |
| | ,, | 8-45 ,, | சேலம் (வள்ளுவர் விழா) தங்கல்: பொதுநலத்துறை வழித்தங்கல் மனை சேலம். |
| | இரவு | 7-00 ,, | தேவகோட்டை, திருவேங்கடமுடையான் உயர்நிலைப்பள்ளி. |
| 26-4-64 | காலை | 10-00 ,, | திருச்சி - தொடர் சொற்பொழிவு |
| | பகல் | 12-00 ,, | திருச்சி அருள்நெறித் திருக்கூட்டத்தின்பேரவை, தங்கல்: திருச்சி நகர் மன்ற வழித்தங்கல் மனை. |

# அருள்நெறியும் மாதரும்

— தவத்திரு குன்றக்குடி அடிகளார் —

## முன்னுரை

'பெண்ணிற் பெருந் தக்க யாவுள?' என்று திருவள்ளுவர் வினா எழுப்பவில்லை. விடையையே வினாப்போல எழுப்புகிறார். பெண்ணினம் பாராட்டுதலுக்கும், பெருமைக்கும் உரியது. பெண் எதையும் அதிகமாக விவாதிக்காமல் ஏற்றுக்கொள்வாள். நம்புவாள். வாழ்ந்தும் காட்டுவாள். அதனாலன்றோ சேக்கிழார் பரவையாரைப் பாராட்டுவதுபோல, பெண்ணினத்தையே பாராட்டுகின்றார். சேக்கிழார் சுந்தரர் வாயிலாகப் பரவையாரைப் பாராட்டும்போது 'கற்பகத்தின் பூங்கொம்போ?' என்று வருணிக்கின்றார். கற்பகத்தரு, கருதியவை அனைத்தையும் தரும் என்பது மரபு. அதுபோல, நல்ல பெண், கருதியவை அனைத்தையும் தரவல்ல ஆற்றல் உடையவளாக இருப்பாள் என்பது பெறப்படுகிறது'.

ஏழாம் நூற்றாண்டில் சமய வாயிலாக சமுதாயப் புரட்சியை நிகழ்த்திய நமது அப்பரடிகளும், திருஞானசம்பந்தரும் பெண்ணினத்தின் பெருமையை - மனையறத்தின் மாட்சியை விளக்கப் பெரிதும் தொண்டாற்றியுள்ளனர். அவர்கள் காலத்தில் வடபுலத்திலிருந்து வந்த பௌத்தமும், சமணமும் தமக்கென நாடும் மொழியும், இறையும் இல்லாத - சுழன்று திரிந்த மாயாவாதமும் பெண்ணினத்தை இழிவுபடுத்தின. மனையறத்தைச் சிற்றின்பம் என்றும் விலங்கென்றும் வருணித்தனர். இயற்கை நெறிக்கு மாறாக துறவு நெறியை வலியுறுத்தினர். இக்கொள்கையைக் கடிந்து நாளும் இனிய தமிழால் அகனைந்திணை ஒழுக்கத்தின் பெருமையை முழங்கினர் நாயன்மார்கள். ஈருருவும் ஒருருவமாய அம்மையப்பன் வழிபாடுகூட ஏழாம் நூற்றாண்டிலேயே முதன்மைப்படுத்தப் பெற்றிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

வாழ்க்கை இனியது -இலட்சிய நோக்குடையது. வாழ்க்கையை மகிழ்ந்து நோக்கி, இனிமைப் பண்புடையதாக்கி இலட்சிய நிறைவுக்குரியதாக்கிக் கொள்ளும் முயற்சி வேண்டும். இங்ஙனம் வாழும் முறையையே திருவள்ளுவர் 'வாழ்வாங்கு வாழ்தல்' என்று குறிப்பிடுகின்றார். வாழ்வாங்கு வாழும் நெறிக்கே அருள்நெறி என்று பெயர்.

திருஞான சம்பந்தர் அருளிய தமிழ், அருள்நெறித் தமிழ். அப்பரடிகள் வளர்த்த நெறி நன்மை பெருகு அருள்நெறி. காந்தியடிகள் நின்று வாழ்ந்த நெறி அருள்நெறி.

## (1)

அருள் நெறியின் முதல் நெறி, அன்பு செய்வது. வாழ்க்கையின் முன்னும் பின்னுமாய முழு இலட்சியம் அன்பு செய்தலேயாம். இவ்வுடம்பின் அகத்துறுப்புக்களையும் புறத்துறுப்புக்களையும் கூர்ந்து நோக்குவோமாயின் அன்பு செய்தற்கென்றே அவை அமைந்திருப்பது புலனாகும்.

அன்பின் வழியது உயிர்நிலை என்பது குறள். பண்பாளருக்குக் காட்டும் அன்பு பண்பை வளர்க்கும். பகைவனுக்குக் காட்டும் அன்பு பகையைக் குறைக்கும். அன்பு செய்யும் ஒழுக்கத்தை ஆண்மகன் முயன்று பெறுகிறான் - பெண்ணோ இயல்பிலேயே பெற்றிருக்கிறாள். அதனால்தான் அன்பிற்குவமையாக தாயே பேசப்பெறுகிறாள். இலக்கியங்களில், பெண் பருவந்தோறும் அன்பு காட்டுவதில் முதிர்ச்சியடைகிறாள். பருவத்திற்குரிய அன்பையும், தியாகத்தையும் அள்ளிச் சொரிகிறாள். அன்புப் பாடம் கற்றுக் கொடுக்கும் தலையாய ஆசிரியர் குலம் பெண் குலமே.

## (2)

அருள் நெறியின் இரண்டாவது ஒழுக்கம் அறநெறி நிற்றல். அறத்தின்பாற்பட்ட ஒழுக்கக் கூறுகள் பலப்பல. எனினும், பிறருக்கு உதவி செய்தலும் அங்ஙனம் உதவி செய்யும் ஆற்றல் கைகூடாதபோது துன்பம் செய்யாதிருத்தலுமே சிறந்த அறப்பண்பு. இப்பண்பு மனித குலத்தில் வளர்ந்தால் சட்டங்களும் திட்டங்களும் இல்லாமலே சோசலிச சமுதாய அமைப்பை நாம் கண்டுவிட முடியும். இத்தகு அரிய பண்பை இயல்பிலேயே பெண்மை பெற்றிருப்பது பாராட்டுதலுக்குரியது. ஒரு பெண் தாய்மையை அடைகின்றபொழுது அவள் செய்யும் தியாகத்திற்கு ஒப்பான வேறு தியாகத்தை நாம் காட்ட முடியுமா? தன் செங்

(11-ஆம் பக்கம் பார்க்க)

கவியரங்கம்

# அறிவு மலர்

## புலவர் அ. சம்பந்தமூர்த்தி

திருச்சி நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற திருச்சிராப்பள்ளி அருள்நெறித் திருக்கூட்ட ஒன்பதாம் ஆண்டு நிறைவு விழாவையொட்டி 14–3–64 பிற்பகல் அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் பெரு மன்றத்தின் செயலர் திரு. அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் கவியரங்கம் ஒன்று சிறப்பாக நடைபெற்றது. கவிஞர்கள் எண்மர் இறைவழிபாட்டிற்குரிய எண்மலர்களைப் பாமாலையாக்கி வழிபட்டனர். அறிவு மலர் என்ற தலைப்பில் புலவர் அ. சம்பந்தமூர்த்தி பாடிய கவிதை மலர் இங்கே மணம் பரப்புகிறது.

— ஆசிரியர்

### தமிழ்த்தாய் வாழ்த்து

இன்பத் தமிழினில் பாட வைப்பாள் - என்னை
இன்னருள் காட்டி அரவணைப்பாள்
அன்பாய்த் தமிழின் சுவையமுதை—அள்ளி
ஊட்டி வளர்த்த தமிழ்த்தாயை.

போற்றித் துதித்துப் பரவிடுவேன்—நன்கு
பொன்னடிக் கேமலர் தூவிடுவேன்
நாற்றிசை யும்புகழ் தமிழரசி—அவள்
நல்லடி தன்னை வணங்குகிறேன்

### குரு வணக்கம்: வெண்பா.

கூவியெனையழைப்பார் கூசாமல் பாடுவென் பார்
மேவி தமிழ்சிறக்கத் தான்சிறப்பார்—ஆவி யென
முத்தமிழை முன்னோர்கள் காத்ததுபோல் காத்திடுவார்
நத்திடுவேன் தான்சரணந் தான்.

### வேறு

கார்முகி லாகவே வந்திடுவார்—தமிழ்க்
காத்தற் குரியராய் நின்றிடுவார்
யாரும் அறிந்திட அ. வெ. ரா.—என
அன்பாய் அழைத்திடும் நற்றலைவர்.

செக்கச் சிவந்த திருவாயால்—நன்றே
செந்தமிழ்க் கவிதைக் கொப்பளிப்பார்
பக்க மிருந்து கவியுரைக்கும்—நல்ல
பாங்கினைப் பெற்று உயர்ந்துவிட்டோம்.

மெய்யில் திருமால் எனநினைப்பீர்—அவர்
மேவும் பெயரினைச் சொல்லிடுவேன்
ஐயன் பெருமாள் கிருட்டினனும்—இங்கு
அமர்ந்து கவிதனைக் கேட்டிடுவீர்.

நெற்றியில் திருநீறு கண்டிடுவீர்—என்னை
நீட்டி அளந்து ஒருமுறையே
வெற்றுரை பேசுவோன் என்றுயெனை-எண்ணி
ஏளனம் செய்து ஒதுக்கிவிடீர்.

சைவம் தழைக்கத் தமிழ்தழைக்க—இங்கு
சார்ந்து விளங்கிடும் உண்மையுரு
சைவமும் வைணமும் இரண்டினையும்—ஒன்றாய்
கண்டிட வந்த திருவுருவோ!

அன்னவர் ஆன்ற பெருந்தலைவர்—எங்கள்
அ.வெ.ரா என்றிடும் மாண்புடையார்
கன்ன லெனும்நல் கவியுரைப்பீர்—யார்க்கும்
கனிவாய் வணக்கம் உரைத்திடுவேன்.

அரங்கினில் ஆடிடும் ஆடரங்கன்—தூய
அன்புளம் கொண்டவர் உளங்களிக்க
அரங்கமாய்க் கூட்டியே கவியரங்கில்—எனை
அங்கம் வகிக்க அழைத்தவரே.

உலகினை ஆட்டிப் படைப்பவனை—நாமே
உளத்தே கொண்டு தொழுதிடவே
பலப்படி யாகவே பத்தியொடு—தினம்
பாவிட வழிவகை கேட்பவரே.

அருள்நெறி போற்றி எமைக்கூட்டி—நாட்டில்
அறநெறி காட்டி அன்பூட்டி
வருமவர் புலவர் கவியுரைக்க—இங்கு
வந்தவர் பெரியீர் யாவருக்கும்.

வணக்கம் உரைத்தே உரைத்திடுவேன்—கவி
வாணர்கள் முன்புமே சொல்லிடுவேன்
மணக்கும் மலரிது பாடிடுவேன்—இங்கு
மதித்துக் கவிதனை ஏற்றிடுவீர்.

### வேறு

சேற்றினிலே முளைத்திடும்நல்
செந்தாமரை மலர்தன்னை
போற்றிடுவாள் இருப்பிடமாய்
பொன்மலராம் தேவியவள்
வீற்றிருந்து வீணையொடு
விளங்குகின்ற அறிவொளியை
ஏற்றுகின்ற தீபமென
இருப்பவளும் ஓர்மலராள்.

(9-ம் பக்கம் பார்க்க)

# எது பிழை? எது சரி?

சாமி பழனியப்பன்

(முன் தொடர்ச்சி)

## ரொப்பு
## நிரப்பு

'தொட்டியில் தண்ணீரை ரொப்பு' என்று கூறுவதும், எழுதுவதும் இயல்பாகவிட்டது. 'ரொப்பு' என்பது பிழையான சொல். நிரப்பு என்பது தான் சரி, எனவே, தொட்டியில் தண்ணீரை நிரப்பு என்று தான் எழுதவேண்டும். அது போலவே, தொட்டியில் நிரம்பத் தண்ணீர் இருக்கிறது என்றுதான் எழுதவேண்டும். ரொம்ப என்பதை நிரம்ப என்றும், ரொப்பு என்பதை நிரப்பு என்றுமே எழுத வேண்டும். அதுதான் சரி.

## பெரியார்
## பெரியாற்று நீர்த்தேக்கம்

'பெரியார் நீர்த்தேக்க நீர் மட்ட விபரம்' என்று பத்திரிகைகளில் தலைப்பிட்டுச் செய்தி வெளிவருவதைக் காண்கின்றோம். பெருமை+ ஆறு=பெரியாறு என்றுதான் வருமே தவிர பெரியார் நீர்த்தேக்கம் என்று வராது. பெரியார் நீர்த்தேக்கம் என்பது பிழை. பெரியாறு+நீர்த்தேக்கம்=பெரியாற்றுநீர்த்தேக்கம் என்று தான் வரும். அது தான் சரி.

## மூந்நாள்
## முன்னாள்

மூந்நாள், முன்னாள் என்ற இரு வேறு சொற்களையும் பொருள்வேறுபாடு தெரியாமல் பலர் பயன்படுத்தி வருகின்றனர். மூந்நாள் என்ற சொல் மூன்று நாளைக் குறிக்கும். முன்னாள் என்ற சொல் முந்திய நாளைக் குறிக்கும். முந்திய நாட்களில் இவர் அமைச்சர் என்று தெரிவிக்க முன்னாள் அமைச்சர் என்றுதான் எழுத வேண்டுமே யொழிய மூந்நாள் அமைச்சர் என்று எழுதக் கூடாது மூந்நாள் அமைச்சர் என்பது மூன்று நாள் அமைச்சர் என்றே பொருள்படும்

மூன்று+நாள்=மூந்நாள்

முன்+நாள்=முன்னாள்

## அந்நாள்
## அன்னாள்

அந்த நாள் என்பதைக் குறிக்க அன்னாள் என்று எழுதுகிறவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். அன்னாள் என்பது அவள் என்றாகுமே தவிர அந்தநாள் என்றாகாது. எனவே, அந்தநாள் என்பதைக் குறிக்க அந்நாள் என்றுதான் எழுத வேண்டும். அதுதான் சரி.

## முதலிய
## ஆகிய

முதலிய, ஆகிய- என்ற இரு வேறுசொற்களுக்கும் பொருள் வேறுபாடுண்டு. எனினும், அந்த பொருள் வேறுபாடு புரியாமலேயே பலர் இந்தச் சொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர்.

'குழந்தையின்பம்' முதலிய கட்டுரைகள்என்றால் குழந்தையின்பம் என்ற கட்டுரையும் வேறுபல கட்டுரைகளும் என்று பொருள்படும். குழந்தையின்பம் ஆகிய கட்டுரைகள் என்று எழுதுவது தவறு. 'அறம், பொருள, இன்பம்' ஆகியவற்றை விளக்குவது திருக்குறள் என்றால், அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றையும் விளக்குவது திருக்குறள் என்று பொருள் படும். அறம் பொருள் ஆகிய இரண்டையும் விளக்குவது திருக்குறள் என்று எழுதுவது பிழை.

## தன்னலம்
## தந்நலம்

தன்னலம், தந்நலம் என்று இரு சொற்களுக்கும் கருத்து வேறுபாடுண்டு. தன்+நலம் = தன்னலம் என்றாகும். இது படர்க்கை ஒருமை. தம்+நலம் =தந்நலம் என்றாகும் இது படர்க்கைப்பன்மை.படர்க்கை ஒருமைக்குத் தன்னலம் என்றும், படர்க்கைப் பன்மைக்குத் தந்நலம் என்றுமே எழுத வேண்டும். அதுதான் சரி.

## சுவரில்

'இந்தச் சுவரில் நோட்டீஸ் ஒட்டக் கூடாது' என்று பல சுவர்களில் எழுதியிருக்கக் காண்கின்றோம். சுவர் என்பது தான் சொல்லே தவிர, சுவறு என்பது சொல்லல்ல. சுவர்+இல் என்பது சுவரில் என்றுதான் வரும். அதுதான் சரி. சுவற்றில் என்று எழுதுவது தவறு.

## பசும்பால்

'இங்கே சுத்தமான பசும் பால் கிடைக்கும்' என்ற அறிவிப்புப் பலகைகளை நாம் பல இடங்களில் பார்க்கிறோம். பசுவின் பால் என்பதையே அவர்கள் பசும்பால் என்று குறிக்கின்றனர். பசுமை+ பால்=பசும்பால் என்பது பசுமையான (பச்சைநிறமுடைய) பால் என்று பொருள்

(8-ம் பக்கம் பார்க்க)

# தமிழகம்

அன்பாலே மக்கள்குலம் இணைந்து வாழும்
அருள்நெறியைப் பரப்புதலே எங்கள் நோக்கம்

மலர் 5] 22—4—64 [இதழ் 20


## தமிழன்னையின் இழப்பு

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் மறைந்துவிட்டார். அவர் மறைவு தமிழகத்திற்கு ஈடுசெய்ய முடியாத ஒரு பேரிழப்பாகும். புரட்சிக் கவிஞர் தமிழுக்காகவே வாழ்ந்தார். அவர் தமிழகத்தின் கவியரசாகவே திகழ்ந்தார். சாதாரண சராசரி தமிழ் மக்களிடத்தி லும் கருத்துவழி ஆட்சி செலுத்தினர். இன்று பல்கிப் பெருகி வளர்ந்திருக்கும் தமிழார்வத்தை வளர்த்தது இவருடைய கவிதை களேயாம்.

புரட்சிக் கவிஞர், சமுதாய சீர்திருத்தத்தை விரும்பியவர். சமுதாயக் கேடுகளைச் சாடுவதில் இவர் தயவு தாட்சண்யமே காட்டியதில்லை. இவர் ஒரு பிறவிக் கவிஞர். ஆழ்ந்த சமுதாய நல வேட்கையாளர். தமிழர் வாழ்வில் புதிய இரத்தத்தைப் பாய்ச் சியவர்.

கவிஞரை மேலெழுந்தவாரியாகச் சிலர் மதிப்பிட்டு நாத்திகர் என்பர். ஆனல், அவர் உண்மையில் நாத்திகர் அல்லர். சமயத் துறையில் படிந்த சில பொருந்தாக் கொள்கைகளை அவர் எதிர்த் தார். திருவாசகத்தில் கவிஞருக்கு ஈடுபாடு உண்டு. அவர் இயற்றிய "முருகன் துதியமுது" பாடல்கள் சிந்தைக்கு இனியன. "எதிர் பாராத முத்தத்"தில் சமயக் கொள்கைகள் பலவற்றை அழகுற எடுத்துக் காட்டியிருக்கிருர்.

தமிழுக்கு உயிராக- தமிழர்களுக்கு விடிவெள்ளியாக - கவிஞர் உலகுக்கு முன்னேடியாகத் திகழ்ந்த இவர், தமிழராய்ப் பிறந்த ஒரே காரணத்தால் பெற வேண்டிய சிறப்புக்கள் அனைத்தையும் பெறவில்லை. அதுதமிழரின் குறைதான்-தமிழகத்தின் அவலநிலை தான். எனினும், அவர் புகழுடல் பெற்று விட்டார். அவரைச் சுட்டெ ரித்த சாம்பலும் தமிழ் மணக்கும்.

கவிஞரின் கவிதைகள் நின்று நிலவும்.
அவர் வழி வையகம் செல்வதாக.

—அடிகளார்

# செடியும் மனிதனும்

## — தவத்திரு குன்றக்குடி அடிகளார் —

இரண்டு பூத் தொட்டிகளில் ஒரே மாதிரியாக எருவும் மண்ணும் இட வேண்டும், இரண்டிலும் ஒரே தன்மையுள்ள பொறுக்கு விதைகளை நட வேண்டும். ஒரு தொட்டியைக் 'கதிரொளி' படாத அறைக்குள்ளும், இன்னொன்றைக் கதிரொளி படுகின்ற வெளியிடத்திலும் வைக்க வேண்டும். இரண்டிற்கும் ஒரே மாதிரியாக நீர் ஊற்றி வர வேண்டும். காலப் போக்கில் இரண்டின் வளர்ச்சியையும் நாம் உற்று நோக்கினால், இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை எளிதில் உணரலாம்.

'கதிரொளி' பட்டு வளர்ந்த செடி நன்றாக ஊட்டமாக வளர்ந்திருக்கும் - அறைக்குள் வளர்ந்த செடி வளர்ச்சி குன்றிப்போயிருக்கும். அது மட்டுமல்ல. இரண்டின் இலைகளிலும் கூட மேறுபாடு தோன்றும். இலைகள் பசுமை நிறம் பெறவும் உயிர் நலம் விளங்கவும் கதிரொளி தேவைப்படுகிறது.

இவற்றிலிருந்து நாம் தெரிந்து கொள்வது, மண்ணிலே வேரூன்றி வளரும் செடிக்கு மண்ணோடு மட்டும் உள்ள தொடர்பு போதாது; விண்ணோடும் தொடர்பு வேண்டும் என்பது. இவ்வுண்மை செடி கொடிகளுக்கு மட்டுமல்ல — வாழும் மனித சமுதாயத்திற்கும் மிகப் பொருந்துவதாகும்.

நமது அன்னை மொழியான தமிழ், காலத்தாலும் கருத்தாலும் மூத்த மொழி - பழமையான மொழி. ஆம், சீரிளமைத் திறம் வாய்ந்த செம்மொழி. 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' என்று பைந்தமிழ்த் தேர்ப் பாகன்' பாரதி பாராட்டிய மொழி. இயலிசை கூத்தெனும் முப்பிரிவுகளைக் கொண்ட இனிய மொழி. கம்பனை - வள்ளுவனை - இளங்கோவை ஈன்ற மொழி - நால்வர் பாடிய நல்லமுத மொழி. தமிழ் எங்கள் தாய்மொழி என்று கூறிக்கொள்ளப் பிறந்த நாம் பெரும் பேறு பெற்றவர்கள்! ஆனாலும் கூட இன்றைய நிலை என்ன?

"புத்தம் புதிய கலைகள்-பஞ்ச பூதத்தின் நுட்பங்கள் கூறும் மெத்த வளருது மேற்கே....."

இவ்வாறு வளர்கின்ற புத்தம் புதிய கலைகளைத் தமிழுக்குக் கொண்டு வந்திருக்கிறோமா? கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோமா? விண்வெளியைப் பற்றியும் வேறு பலவற்றைப் பற்றியும் நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாக ஆராய்ச்சிகள் வெளிவந்தவண்ணமிருக்கின்றன அங்கு! இங்கோ அவற்றைப்பற்றியசிந்தனையே இல்லை. இந்நிலை மாறி வளர்ந்து வரும் புதிய உலகில் நாமும் உலகந் தழுவிய வாழ்க்கை வாழ - நாமும் உலகத்தோடு ஒட்டி வாழ்ந்து வளர மண்ணோடு மட்டும் தொடர்பு கொண்ட இருட்டறைச் செடிபோல இல்லாமல், விண்ணோடும் தொடர்பு கொண்ட வெட்ட வெளிச் செடிபோல ஆகவேண்டும். தமிழோடு மட்டுமன்றிப் பிற மொழிகளைப் படிப்பதால் தமிழ் அழிந்துவிடும் என்று கருதுகிற குறுகிய மனப்பான்மையை விட்டுவிட வேண்டும்; தமிழ் வளரப் பிறமொழிப் பயிற்சியே துணை செய்யும்; செய்ய முடியும். நாம் ஆராய்ந்து நல்லுணவு - கலப்புணவு எடுத்துக்கொண்டால் அந்த உணவு உடலுக்கு வலிவும் வனப்பும் தருமே தவிர, உண்பது உடலை அழித்து விடும் என்று கூறுவது அறிவுடைமையாகுமோ?

எனவே, தமிழோடு பிற மொழிகளையும் பயின்று தமிழுக்குப் புதிய இரத்தம் பாய்ச்சும் முயற்சியில் தமிழர்கள் ஈடுபடவேண்டும் என்று விரும்புகிறோம்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

படுமே யன்றிப் பசுவின் பாலைக் குறிக்காது. பசுவின் பாலைக் குறிக்க, பசு+பால்= பசுப்பால் என்றுதான் எழுத வேண்டும். பசு+பால் என்பது பசுப்பால் என்றுதான் வரும். அதுதான் சரி.

## ஏழைமை

'அவன் ஏழ்மையில் அவதிப் படுகிறன்' என்று பலர் எழுதுகின்றனர். ஏழ்மை என்பது ஏழாகுந் தன்மையைக் குறிக்குமே யொழிய வறுமை நிலையைக் குறிக்காது. ஏழைத் தன்மையைக் குறிக்க ஏழைமை என்னும் சொல்லையே பயன்படுத்துதல் வேண்டும். ஏழ்மை என்பது பிழை.

## நன்செய் புன்செய்

யாரேனும் ஒரு நிலக் கிழாரைப் பற்றிக் குறிப்பிடும் போது 'அவருக்கு ஏராளமான நஞ்சை புஞ்சை யுண்டு' என்று சொல்லுகிறோமல்லவா? இங்கு நஞ்சை என்பது நெல் விளையும் நன்மை+செய்=நன் செய்யைக் குறிப்பதாகக் கொள்கிறோம். அதுநன்மை+ செய்=நன் செய் என்று தான் வருமே தவிர நஞ்சை என்று வராது. அது போல நெல் தவிர இதர தானியங்கள் விளையும் செய்புன்மை+ செய்='புன்செய்' என்றுதான் வருமே யொழிய புஞ்சை என்று வராது. நஞ்சை, புஞ்சை என்பன பிழையுடைய சொற்கள். 'நன்செய்' 'புன்செய்' என்பனவே சரியான சொற்கள்.

## மருட்டினுர்

அவர் அவனை 'மிரட்டினுர்' என்று சொல்லுவதும், எழுதுவதும் இயல்பாகிவிட்டது. மிரட்டினுர் எனுஞ் சொல் பிழைபட்ட சொல் என்பது பலர்க்குத் தெரியாது. மருள்என்பதனடியாகப் பிறந்த மருட்டு, மருட்டுதல், மருட்டினுர் என்பனவே சரி.

## விருப்போ வெறுப்போ

'எனக்கு அவன் மீது விருப்போ அல்லதுவெறுப்போ இல்லை என்று கூறுகிறோமல்லவா? இவ்வாறு விருப்போ அல்லது வெறுப்போ என்று கூறுவது பிழை. எனக்கு விருப்போ வெறுப்போ கிடையாது என்பதுதான் சரி. விருப்போ வெறுப்போ என்பவற்றிலுள்ள ஓகாரமே ஐயப்பொருளைத் தருவதால் அல்லது என்ற சொல்லை எடுத்தாளுதல் மிகையேயாம்.

## வெந்நீர்

நான் வென்னீரில்தான் குளிக்கிறேன் என்று எழுதுகிறவர்கள் பலர் உள்ளனர். வெம்மை—நீர் = வெந்நீர் என்ருகுமே தவிர வென்னீர் என்ருகாது வென்னீர் என்பதற்குப் பொருளுமில்லை.

(வளரும்)

---

## திருப்புத்தூர் நகரசுத்தித் தொழிலாளர் கூட்டம்

திருப்புத்தூர் பஞ்சாயத்து போர்டு நகரசுத்தித்தொழிலாளர்கள் கூட்டம், திருப்புத்தூர் அருள்நெறி இராசாசி உணவு விடுதியில் 12-4-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நகரசுத்தித் தொழிலாளர்கள் கூறிய பல்வேறு குறைகளையும், பிரச்னைகளையும் தவத்திரு அடிகளார் அவர்கள் பெரிதும் பரிவோடு கேட்டு, ஆவன செய்வதாகக் கூறினுர்கள். ஹரிசன நல டிப்டி சேவக் திரு. சந்திரசேகரன், திரு. குழந்தைவேலு சேர்வை ஆகியோர் கூட்டத்தை தக்க முறையில் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

## ஆலந்தூர் உயர்நிலைப்பள்ளி ஆண்டுவிழா

ஆலந்தூர் உயர்நிலைப்பள்ளியின் 3-வது ஆண்டு நிறைவு விழா 11-4-64ல் தமிழக செய்தித்துறை அமைச்சர் மேதகு கோ. பூவராகன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புரையாற்றினுர்கள். அவர்கள் பேசுகையில், மாணவர்கள் கல்வியறிவோடு, கலை இலக்கியத் துறையிலும். தொழிலியல் துறையிலும் பயிற்சி பெற்றுச் சிறந்து விளங்கவேண்டும் என்று குறிப்பிட்டார்கள்.

இறுதியாக, அமைச்சர், வெற்றிபெற்ற மாணவ மாணவியர்க்குப் பரிசுகள் வழங்கினுர்.

## வில்லிவாக்கம் சாதி ஒழிப்பு மாநாடு

மேற்கு சென்னை வில்லிவாக்கம் திராவிடர் கழகத்தின் சார்பில் வில்லிவாக்கத்தில் அய்யாக்கண்ணு அரங்கில் 11-4-64ல் நடைபெற்ற சாதி ஒழிப்பு மாநாட்டிற்கு தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமை வகித்தார்கள். திரு அ.வெ. வெள்ளையப்பன் அனைவரையும் வரவேற்றுர். சட்ட மன்ற உறுப்பினர் திரு. எம். எஸ். செல்வராசன் மாநாட்டைத்திறந்து வைத்தார்.

தலைவர் பெரியார் அவர்களும், திரு. ஈ.வெ.கி. சம்பத், திரு என். சிவராஜ், திரு. கி. வீரமணி, எம்.ஏ., பி.எல். ஆகியோரும் மற்றும் பலரும் சிறப்புச் சொற்பொழிவாற்றினர்.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

வையத்தைப் படைத்திடுவான்
வானோரும் போற்றுகின்ற
செய்யவன்தன் இருக்கையதாய்
தேர்ந்ததுவும் ஓர்மலரே
தெய்வமெலாம் மலர்தன்னில்
எய்திடுமேல் மலர்கொண்டு
ஐயனையே வணங்குதற்கு
அருமலரை யான்தேடேன்.

தென்றல்தரும் புதுமணத்தை
நுகர்ந்துமணம் வீசுகின்ற
அன்றலர்ந்த மலரம்பை
அடுத்தடுத்து கோத்துவிட்டு
வென்றிடுவான் வீரனவன்
விட்டிடுவான் விரட்டிடுவான்
கொன்றிடுவான் மன்மதனும்
கொடிமலராம் ஆயுதத்தால்.

அம்மலராம் வெவ்வினைக்கு
ஆற்றிடுவார் இவ்வுலகில்
எம்மருங்கும் இல்லையென்பேன்
எப்படியோ எங்கிருந்தோ
செம்மாந்தும் இறுமாந்தும்
செகமெல்லாம் அளந்திடுவான்
பெம்மான்தன் பெருமையெல்லாம்
பேசுவதும் அம்மலரால்.

உயிர்க்கூடு விடுமளவும்
அவன்பெருமை பேசிடவே
மயிலன்னார் மையலிலே
மயங்கிடவே செய்திடுவான்
அயில்வேலாய் மலர்வேலை
அடுக்கடுக்காய்ப் பாய்ச்சியவன்
கயிலைமலைக் கிறையோனும்
கண்ணுதலால் எரிந்திட்டான்.

எரிந்தானோ அழிந்தானோ
என்றிங்கு வாதமதைப்
புரிந்திடுவார் பலருண்டு
புகலுண்டோ அவன்கணைக்கு
சரியாக நிகராக
சதுர்மறையை ஓதுவித்த
பெரியோரே அக்கணையை
பாமலரால் வென்றிடுவார்?

பாமணக்கும் பாட்டிசைத்து
பத்தியொடு பரமனையே
நாமணக்க நற்சுவையாய்
நல்லபுகழ் பாடுகின்றார்
தேமணக்கும் திருப்புகழும்
தெவிட்டாத தெள்ளமுதும்
தேன்மணக்கும் ஓர்மலராய்
தேர்ந்ததுவும் பாமலரே

அறிவுமலர்ச் சோலையிலே
ஆடுகின்ற பைங்கிளியாய்ச்
செறிந்தபல கருத்தினிலே
சேர்ந்துநடம் இடுகின்றார்
நெறிகள்பல உண்டென்பார்
நேர்மைபல சொல்லிடுவார்
வெறிச்செயலாம் மன்மதனின்
வெவ்வினையை வேரறுப்பார்

அருணகிரி போற்றுகின்ற
அருங்கவிகள் அத்தனையும்
பெருகுகின்ற அறிவுமலர்ப்
பெட்டகமாய்க் கண்டிடுவோம்
அருமலராம் நறுமலரை
ஆன்றோர்கள் இப்படியாய்
ஒருமலரால் துதித்தாரோ
அறிவுமலர் பலகண்டார்

அம்மலரோன் எம்மலரால்
ஏவிடுவான் எங்குண்டு?
அம்மலரை நாம்பறித்து
அவனுக்கே சூட்டிடுவோம்
வெம்முனையில் சந்தித்து
வென்றிடுவேன் என்பனபோல்
இம்மன்றப் பெருவெளியில்
அறிவுமலர் யான்தேர்ந்தேன்.

அறிவாலே விளங்குகின்ற
ஆனந்தப் பெருங்கூத்தன்
நெறிநின்றார் தமக்கருளும்
நின்மலனைத் தூயவனை
பொறிவினைகள் போம்வழியே
போகவிடாப் புண்ணியனை
செறிவினைகள் நீக்கிடவே
அறிவுமலர் தூவிடுவோம்

பாதமலர் தொழுவோரே
பாரிலவன் சீரடியை
பாதகத்தின் மலம்போக்கும்
பொன்மலராய்ப் போற்றிடுவீர்
வேதமுதல் இறையோனை
வேண்டிடுவீர் அடியோரே
பாதகம லமென்றே
பரவுவதும் அவன்தாளே.

(வளரும்)

---

## சிந்தனை

வெறுச்சோடிக் காளைகளை வண்டியில் பூட்டினால் வண்டி எப்படி ஒழுங்காகச் செல்லாதோ, அப்படியே மன ஒருமைப்பாடில்லாத ஆணும் பெண்ணும் திருமண வாழ்வு மேற் கொண்டால் அவர்கள் தொடங்கும் இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாக-இன்பவாழ்க்கையாக அமையாது. —அடிகளார்

# செய்திச் சுருள்

## ஸ்ரீ சண்முகநாதப் பெருமானுக்கு பால்குட விழா

வறுமை நீங்கி எங்கும் வளமை பொங்க ஸ்ரீ சண்முக நாதப்பெருமானுக்கு வழக்கம் போல இவ்வாண்டும் குரோதி ஆண்டுப்பிறப்பன்று 13-4-64 இல் பால்குடவிழா மிக்க சிறப்பாக நடைபெற்றது.

திருவண்ணாமலை ஆதீனத் திருமடத்தில் காலையில் ஸ்ரீ காளத்திநாதருக்கு விசேட அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன. தவத்திரு அடிகளார் அவர்கள் அன்றுகாலை தமது ஆத்மார்த்திக வழிபாட்டை முடித்துக் கொண்டு ஸ்ரீ காளத்திநாதர் பூசைக்கு எழுந்தருளினார்கள். ஆதீன தேவாலய அலுவலர்களும், கல்வி நிலையங்களின் ஆசிரியர்கள், தலைமை ஆசிரியர்களும், ஏராளமான உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களும் வந்திருந்தார்கள்.

ஸ்ரீ காளத்திநாதர் பூசை நடைபெற்றது. அனைவர்க்கும் தவத்திரு அடிகளார் அவர்கள் திருவருட் பிரசாதம் வழங்கி பால் குடங்களை எடுத்துக் கொடுத்தார்கள். அவர்கள் அனைவரும் பால் குடங்களை எடுத்துக்கொண்டு முருகா முருகா என்று பக்திப் பரவசமாக ஓதிக்கொண்டு ஸ்ரீ சண்முகநாதப் பெருமான் சந்நிதிக்குச் சென்றார்கள் அங்கு, தவத்திரு அடிகளார் அவர்கள் பால்குடங்களை ஒவ்வொன்றாக வாங்கிக் கொடுத்தார்கள். ஸ்ரீ சண்முகநாதப் பெருமானுக்குப் பால் முழுக்கு நடைபெற்றது. பின்னர், எல்லோரும் ஸ்ரீ சண்முகநாதனை வழிபட்டு மகிழ்ந்தார்கள். ஆதீனத் திருமடத்தில் மகேசுவரபூசை நடைபெற்றது.

## பிரான்மலையில் சித்திரைத் திருவிழா

திருவண்ணாமலை ஆதீனம் பிரான்மலை வகையரு ஐந்து கோவில் தேவாலயத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ அமிர்தேசுவரி கொடுங்குன்றநாதர் சித்திரைத் திருவிழா வழக்கம் போல இவ்வாண்டும் சிறப்பாக நடைபெறுகிறது. 17–4–64-ல் கொடியேற்றம் நடைபெற்றது. திருவிழா தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. 20-4-64ல் திருவண்ணாமலை ஆதீன மண்டகப்படி நடைபெறுகிறது. தினமும் தேவார பாராயணமும், வேத பாராயணமும் நடைபெறுகின்றன. 25-4-64ல் திருத்தேர் நடைபெறும்.

20-4-64 முதல் 26-4-64 வரை நாதசுர இசைமணிகள் எஸ். வைரவரத்தினம், எஸ். கண்ணுச்சாமி ஆகியோரின் நாதசுர இன்னிசையும், என். சுப்பிரமணியம் எஸ். மருதையா ஆகியோரின் தவுல் கச்சேரியும், பொ. புதுப்பட்டி எஸ். காசிநாதன் குழுவினரின் பியாண்டு வாத்தியமும் நடைபெறும்.

20-4-64ல் டில்லிப் புகழ் குமாரி கல்யாணி குழுவினரின் தேவேந்திர மேளம், கரகாட்டம் முதலியனவும் நடைபெறும்.

26-4-64ல் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வித்துவான் இசைக்கொண்டல் திரு. எம். மணிராசன் குழுவினரின் இன்னிசை நடைபெறும்.

## திருவிளையாட்டம் இலக்கிய மன்ற ஆண்டுவிழா

திருவிளையாட்டம் சௌரிராஜன் உயர்நிலைப் பள்ளி இலக்கிய மன்ற ஆண்டு விழா 14-4-64ல் தவத்திரு அடிகளார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திரு. இரா. பாலகிருட்டின முதலியார் பி. ஏ., எல். டி. சங்க இலக்கிய மாண்பு குறித்துச் சொற்பொழிவாற்றினார்.

## தஞ்சையில் டாக்டர் அம்பேத்கார் பிறந்த நாள்

தாழ்த்தப்பட்டோர் தலைவர் டாக்டர் அம்பேத்கார் அவர்களின் 74-வது பிறந்த நாள் விழா 14–4–64-ல் தஞ்சை இராமநாதன் செட்டியார் மன்றத்தில் திரு. ஆர். எஸ். மலையப்பன் பி.ஏ. ஐ.ஏ.எஸ். தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திரு. என். குப்புசாமி பி. ஏ., பி. எல். அனைவரையும் வரவேற்றார். திருவாளர்கள் ரெங்கராசன், பி.காம்., பி.எல்., வி. வீராசாமி பி. ஏ., புலவர் இராமச்சந்திரன் ஆகியோர் சொற்பொழி

வாற்றினர். தவத்திரு அடிகளார் அவர்கள் தாழ்த்தப்பட்டோர் சமுதாய எழுச்சிக்கும், ஏற்றத்திற்கும் டாக்டர் அம்பேத்கார் ஆற்றியுள்ள சேவைகளையும், இன்று, நாடு சுதந்திரம் பெற்ற பிறகு நமது பாரத அரசு தாழ்த்தப்பட்டோர் நிலை உயரத் திட்டமிட்டுச் செயல்பட்டு வருவதையும் விளக்கினார்கள். திரு வி. தங்கவேலு நன்றி கூறினார்.

## காரைக்குடி தமிழ்-கலைமன்ற ஆண்டுவிழா

காரைக்குடி தமிழ்-கலை மன்றத்தின 11-வது ஆண்டு விழா 12-4-64ல் காரைக்குடி எஸ். எம் எஸ். உயர்நிலைப் பள்ளியில் கரூர் நகரசபை ஆணையர் திரு. கே. வி. நடராசன் தலைமையில் நடைபெற்றது. மன்றத் தலைவர் திரு. எம். வி. எம். மெய்யப்ப செட்டியார் அனைவரையும் வரவேற்றார்.

திரு. ஏ எல். சுப்பையா அம்பலம், திரு. சி. சொக்கலிங்கம் பிள்ளை, திரு. என். சுந்தரம் பிள்ளை ஆகியோர் கலந்துகொண்டனர்.

தவத்திரு அடிகளார் அவர்கள் சிறப்புரையாற்றினார்கள். அவர்கள் பேசுகையில், கட்சி வேறுபாடோ, கொள்கை வேறுபாடோ கருதாமல் எல்லோருமே பொதுத் தொண்டில் ஈடுபடவேண்டும்: நாட்டில் வேற்றுமையைப் போக்கி ஒற்றுமையை உருவாக்க வேண்டும்; பகைமை பாராட்டாமல் அன்பை வளர்க்க வேண்டும்; கிராமச் சமுதாயத்தில் கருத்துப் புரட்சியை உருவாக்குவது மிகமிக இன்றியமையாதது. வெறும் பொழுதுபோக்கு நாடகங்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றைப் பரப்புவதைவிட்டு, மக்களிடம் எது இல்லையோ, மக்களுக்கு எது தேவையோ அதை வளர்க்கக்கூடிய வகையில் பணியை மேற்கொள்ள வேண்டும். இத்துறையில் இதுபோன்ற கலை மன்றங்கள் ஈடுபட்டுப் பணிபுரிந்து வெற்றிபெறவேண்டும் என்று குறிப்பிட்டார்கள்.

பின்னர், குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நகர் மன்றத் தலைவர் திரு. எஸ். முத்தையா செட்டியார் அனைவர்க்கும் பரிசுகள் வழங்கினார். திரு. பழ. மெ. பெரி. மெய்யப்பன் அனைவர்க்கும் நன்றி நவின்றார்.

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

குருதியையே பால் உணவாக மாற்றி, குழந்தைக்கு ஊட்டி வளர்க்கிறாள். இதைவிடச் சிறந்த கருணையை நாம் காண முடியுமா? இதனாலன்றோ நம் மாணிக்கவாசகர் இறைவனைப் பாராட்டும் போது 'தாயாய் முலையைத் தருவானை' என்று குறிப்பிடுகின்றார். அதுமட்டுமல்ல. குழந்தையின் நோய்க்கு,தான் மருந்துண்டு பத்தியங் காக்கும் பண்பும் தாய்மையிடத்திலேயே உண்டு. இத்தகு சிறந்த இயல்புகளை மற்றவர்களுக்கும் இவர்கள் கற்றுக் கொடுப்பார்களானால் வையகம் துயர் நீங்கி வாழுறவோங்கும்.

(3)

அருள் நெறியின் மூன்றாவது ஒழுக்கம் இறை வழிபாட்டுநெறி. உடலுக்குத் தேவை மூச்சுக்காற்று உயிருக்குத் தேவை இறைவழிபாடு, இரைப்பைக்குத் தேவை சோறு, அகப்பைக்குத் தேவை அருளியல் சிந்தனை. பெண்களிடத்தில் இயல்பாகவே கடவுள் வழிபாட்டுணர்ச்சி மிகுந்திருக்கிறது. அதன் காரணமாகவே அவர்களிடத்து நல்லியல்புகளும் பல்கிப் பெருகிக் காணப்பெறுகின்றன. சமய வரலாறுகளைப் பார்த்தாலும் ஆண்மக்கள் தடம் புரண்ட பல செய்திகளைப் பார்க்கிறோம். ஆனால், பெண்கள் தாம் தடம் புரளாததோடு, தடம் புரண்டவர்களையும் தகுதிப்படுத்தி அருள் நெறிக்கு ஆற்றுப்படுத்தியிருக்கிறார்கள்.

இந்தச் சிறப்பியல்புகளுக்குத் திலகவதியார், மங்கையர்க்கரசியின் வரலாறுகளை நாம் எடுத்துக்காட்டாகக் கூறலாம். இத்தகு பெருமைக்குரிய பண்புக் கூறுபாடுகளை இயல்பிலேயே பெற்றிருக்கிற பெண்மைக் குலம் தாய்க்குலம் சுழன்றடித்துவரும் புதுமைக் காற்றின் பேரால் தடம் புரளாமல் நிலைபெற்றிருப்பார்களானால் அருள்நெறி வளரும்! அவர்கள் மனித குலத்தை நேசிக்க - அன்பு செலுத்த நமக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஒருவருக்காக ஒருவர் தியாகம் செய்யும் நல்வாழ்க்கையை நமக்குக் காட்ட வேண்டும். குறைவிலா நிறைவாக - கோதிலா அமுதாக விளங்கும் திருவருளை வாழ்த்த இன்ப அன்பு கலந்த நல்வாழ்வு வாழ வழி நடத்திச் செல்ல வேண்டும்.

Registered No. M- 7827 THAMILAGAM. Weekly 20-4-64





தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின்
சமய, இலக்கிய தொடர்ச் சொற்பொழிவுகள்
6-வது சொற்பொழிவு

---

இடம்:- திருச்சி தமிழ்ச்சங்கக் கட்டிடத்தில்
தேதி:- 26—4—64 ஞாயிறு காலை 10மணி

"சிலம்பில் வரும் சில பாத்திரங்கள்"
எனுந்தலைப்பில் 'மாதவி' பற்றி

தவத்திரு அடிகளார் அவர்கள் பேருரை நிகழ்த்துவார்கள்.

அனைவரும் வருக!

திருச்சி நகர அருள்நெறித் திருக்கூட்டம்
திருச்சிராப்பள்ளி.

வெளியிடுவோர், ஆசிரியர்: ஆறு. சுப்பிரமணியன், அடிகளார் அச்சகம், குன்றக்குடி.
இராமநாதபுரம் மாவட்டம். துணை ஆசிரியர்: சாமி பழனியப்பன்.